Regd. No. M.7897

NAVAMANI (Tamil Daily) MADRAS

"நவமணி"
சந்தா விகிதம்
1—9—74 முதல் தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 8-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

ஆசிரியர்: சோலை

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த்தினசரி

மலர் 16 இதழ் 270 ★ சென்னை 13—6—76 ஞாயிறு ★ வெளியூர் 14—6—76 திங்கள் ★ 4 பக்கம் 25 காசு

COMPLIMENTARY COPY

Kalighat Dental Powder
பற்களை வெண்மையாக்கி வாய் துர் நாற்றத்தைப் போக்கி ஈறுகளை பலப்படுத்தும்...
தயாரிப்பாளர்கள்: யூனிவர்ஸல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ், சென்னை-7

## இளைஞர் காங்கிரஸ்: 40 லட்சம் மெம்பர் சேர்க்க முடிவு

ஹைதராபாத், ஜூன் 13—ஆந்திர மாநிலத்தில் இளைஞர் காங்கிரசில் 40 லட்சம் பேர் மெம்பர்களாகச் சேர்க்கப்படுவார்கள் என்று மாநில இளைஞர் காங்கிரஸ் தலைவர் இந்திர செய்ன் ரெட்டி கூறினார்.

இதுவரை மெம்பர்கள் சேர்ப்பதற்கு 15 லட்சம் பாரங்கள் அச்சடித்து அனுப்பி இருக்கிறோம். விரைவில் மேலும் 12 லட்சம் பாரங்கள் அச்சடித்து அனுப்ப இருக்கிறோம் என்று அவர் கூறினார்.

உண்மையான உளப்பூர்வமாக செயல்படக்கூடிய இளைஞர்களைத்தான் காங்கிரஸ் கட்சியில் உறுப்பினர்களாகச் சேர்ப்போம் என்று ரெட்டி கூறினார்.

### கருநாடகத்தில்

கருநாடக மாநிலத்தில் 3 லட்சம் பேர் மெம்பர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என்று மாநில இளைஞர் காங்கிரஸ் தலைவர் ரகுபதி கடாக் நகரில் கூறினார்.

என்றாலும் 5 லட்சம் பேர் இளைஞர் காங்கிரசில் சேருவார்கள் என்று எதிர்பார்ப்பதாகவும் அவர் கூறினார்.

கருநாடக மாநிலத்தில் காங்கிரஸ் மெம்பர்களின் எண்ணிக்கை 5 லட்சத்தைக் கடந்துவிட்டது என்று மாநில காங்கிரஸ் தலைவர் கே. படீல் கூறினார்.

எல்லா மாவட்ட தாலுகா காங்கிரஸ் கமிட்டிகளும் கலைக்கப்படும். புதிய கமிட்டிகள் அமைக்கப்படும் என்றும் அவர் கூறினார்.

### அரசு ஊழியருக்கு கதர்

அரசாங்கச் செயலாளர்களில் இருந்து எல்லா அரசு ஊழியர்களும் கதர் அணிய வேண்டும் என்றும், கதர் அணிவதைக் கட்டாயமாக்க வேண்டும் என்றும் அவர் கூறினார்.

நான்காம் பிரிவு அரசு ஊழியர்கள் மட்டும் ஏன் கதர் அணிய வேண்டும். எல்லா அரசு ஊழியர்களும் கட்டாயமாக கதர் அணிய வேண்டும் என்று கதர், கிராமத் தொழில் மாநாட்டில் பேசுகையில் கூறினார்.

6-ம் பத்தி தொடர்ச்சி

புரியாமல் இருக்க முடியாது. உற்பத்தியைப் பெருக்க கிராம மக்களுக்குத் துணை செய்கிறீர்கள். மக்களை வாழவைக்கிறீர்கள்.

உங்கள் கஷ்டம் தீர்க்கப்பட வேண்டும். இதற்கு நீங்கள் சொல்லும் கோரிக்கைகளை எனக்கு அனுப்பிவைத்தால் என்னால் ஆன உதவியை அதற்குச் செய்வேன் என்றார்.

கு. தண்டபாணி வரவேற்புரை நிகழ்த்தினார். திருமலை தீர்மானங்களைப் படித்தார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி எம். பி. யான காத்தமுத்து, மற்றும் ஜெகநாதன், ராணிப்பேட்டை கருப்புசாமி ஆகியோரும் மாநாட்டில் பேசினார்கள்.

சிறப்பு மலரை வேளாண்மைத்துறை இணை இயக்குநர் பெற்றுக் கொண்டார்.

## தென் சென்னை மாவட்ட காங்கிரஸ் நிர்வாகிகள்: மூப்பனார் அறிவிப்பு

சென்னை, ஜூன் 13—தென் சென்னை மாவட்ட காங்கிரஸ் கமிட்டியின் நிர்வாகிகள் பெயர் பட்டியலை காங்கிரஸ் தலைவர் கருப்பையா மூப்பனார் வெளியிட்டு இருக்கிறார்.

தென்சென்னை மாவட்ட காங்கிரஸ் துணைத் தலைவர்களாக கோபால கிருஷ்ணன், நாராயணன், தட்சிணாமூர்த்தி, ராஜகோபால், லால் ஆகியோர் நியமனம் செய்யப்பட்டிருக்கின்றனர். இன்னும் ஒரு துணைத் தலைவர் பெயர் பின்னர் அறிவிக்கப்படும் என்று தெரிகிறது.

செயலாளர்களாக சுதர்சனம், மார்க்ஸ், சண்முகம், முத்தையா, இசக்கி பாண்டியன், ஆகியோர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இன்னும் ஒரு செயலாளர் நியமனம் செய்யப்படுவார்.

பொருளாளராக கொண்டல்சாமி நியமனம் செய்யப்பட்டிருக்கிறார்.

நிர்வாக குழுவிற்கு 49பேர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இதில் செங்கல்வராயன் இடம் பெற்றுள்ளார்.

விசேஷ அழைப்பாளர்களாக என். எம். மணிவர்மா, பசுபதிதன்ராஜ், டிமாண்டி உட்பட 10 பேர்கள் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

## அண்டை நாடுகளுடன் நல்லுறவிற்கு
# இந்திரா முயற்சி
## பிரஷ்னேவ் வரவேற்பு

புதுடெல்லி, ஜூன் 13—அண்டை நாடுகளுடன் நல்லுறவை ஏற்படுத்திக் கொள்ள பிரதமர் இந்திரா எடுத்து வரும் முயற்சிகளை சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் வரவேற்று இருக்கிறார்.

இந்தமாதம் 11ந் தேதி மாஸ்கோவில் கையெழுத்தான இந்திய—சோவியத் கூட்டறிக்கை இன்று ஒரே சமயத்தில் புது டெல்லியிலும் மாஸ்கோவிலும் வெளியிடப்பட்டது.

இந்தக் கூட்டறிக்கையில் பிரதமர் இந்திராவும் பிரஷ்னேவும் கையெழுத்திட்டிருக்கின்றனர்.

இரு நாடுகளுக்குமிடையே வர்த்தகபொருள்களின் பட்டியலை விரிவுபடுத்துவது மற்றும் இரு நாடுகளுக்குமிடையே உடன்பாடு ஏற்பட்டிருக்கிறது.

இந்தியாவிற்கும் சோவியத் நாட்டிற்கும் இடையே வர்த்தகம் அபிவிருத்தி அடைந்து வருவது பற்றி இருதரப்பிலும் திருப்தி தெரிவிக்கப்பட்டது.

புதிய துறையில் ஒத்துழைப்பு காணுவதற்கு வழிகாட்டுதல் கொள்கைகள் வகுக்கப்படவேண்டும் என்ற கருத்து இரண்டு நாட்டுத் தலைவர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இந்தியாபாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளுக்குமிடையே ஆதாரக உறவு ஏற்படுத்த முடிவு செய்யப்பட்டிருப்பதை கூட்டறிக்கை வரவேற்றிருக்கிறது.

இந்திய துணைக் கண்டத்தில் இருக்கும் நாடுகளுக்கிடையே நல்லுறவு நிலவ வேண்டும் என்பதை இரு நாட்டு தலைவர்களும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

இந்திய துணைக்கண்டத்தில் பதட்டநிலை ஏற்படுத்த எந்த சக்திகள் முயன்றாலும் அதை எதிர்க்க இருநாடுகளும் உறுதி பூண்டிருக்கின்றன.

உள்நாட்டு வெளிநாட்டு சக்திகளின் தூண்டுதல்காரணமாக இந்திய துணைக் கண்டத்தில்பதட்டநிலை ஏற்படுமானால் அதை எதிர்த்து முறியடிக்க வேண்டும் என்பதை இரு தலைவர்களும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

இந்திய துணைக்கண்டத்தில் சகஜநிலை நிலவுவதற்காக எடுத்துக் கொள்ளப்படும் முயற்சிகளை கூட்டறிக்கைவரவேற்றிருக்கிறது.

பரஸ்பர நம்பிக்கை. அண்டை நாடுகளுடன் நல்லுறவு ஆகியவை இந்திய துணைக கண்டத்தில் உள்ள நாடுகளுக்கு இடையே இருக்க வேண்டும் என்பதை கூட்டறிக்கை வலியுறுத்தியுள்ளது.

இரு நாடுகளிலும் உற்பத்தி ஒத்துழைப்பு ஆகியவற்றை விரிவுபடுத்த கூட்டு முயற்சிகளை மேற்கொள்ள இருநாட்டு தலைவர்களும் உறுதிபூண்டிருக்கின்றனர்.

இவ்வாறு அந்த கூட்டறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

பிரஷ்னேவ்

### நடுக்கும் குளிரிலும் மக்கள் வெள்ளம்

## ஆர்மீனிய குடியரசில் பிரதமர் இந்திராவிற்கு மகத்தான வரவேற்பு

யெரவான், ஜூன் 13—ஆர்மீனிய குடியரசின் தலைநகரான யெரவான் நகரில் பிரதமர் இந்திராவிற்கு நேற்று மகத்தான வரவேற்பு அளிக்கப்பட்டது.

நடுக்குகின்ற கடுங்குளிரையும் பொருட்படுத்தாது யெரவான் நகர தெருக்களில் மக்கள் வெள்ளம் பெருகி வழிந்தது.

இந்தியா - சோவியத் தேசியக் கொடிகளை ஆட்டி பிரதமர் இந்திராவை யெரவான் மக்கள் வரவேற்றனர்.

வண்ண வண்ண ஆடைகளை அணிந்துகொண்டு பிரதமரை ஆர்மீனிய மக்கள் குதூகலமாக வரவேற்றனர்.

பிரதமரைக் காண்பதற்காக மக்கள் அவரது காரின் பின்னாலேயே ஓடினார்கள்.

பிரதமர் இந்திராவின்மேல் சோவியத் மக்கள் எவ்வளவு மதிப்பு வைத்திருக்கிறார்கள் என்பது ஆயிரமாயிரம் மக்கள் திரண்டுநின்று அவரை வரவேற்றதில் இருந்துபுலப்பட்டது.

### சோவியத்தில் தீபாவளி

நமது நாட்டில் தீபாவளி பண்டிகையை கொண்டாடும் போது எவ்வளவு கோலாகலமாக இருக்குமோ அதுபோல நேற்றிரவு யெரவான் நகரம் இருந்தது.

பிரதமரின் வருகையை முன்னிட்டு தெருக்கள்வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

நேற்று காலை யெரவான் நகருக்கு வந்து சேர்ந்ததும் ஆர்மீனிய குடியரசின் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவருடன் பிரதமர் இந்திரா 1 மணி நேரம் பேச்சு வார்த்தை நடத்தினார்.

பின்னர் பிரதமர் இந்திரா நகரில் உள்ள முக்கிய இடங்களுக்கு விஜயம் செய்தார்.

சென்ற இடத்தில் எல்லாம் ஏராளமான மக்கள் திரண்டு நின்று மகிழ்ச்சி ஆரவாரம் செய்து பிரதமரை வரவேற்றது மறக்கமுடியாத இனிய நிகழ்ச்சியாகும்.

### கம்ப்யூட்டர் நிலையம்

பிரதமர் இந்திரா ஆர்மீனிய குடியரசின் மிகப் பெரிய கம்ப்யூட்டர் நிலையத்தைப் பார்வையிடச் சென்றார்.

கம்ப்யூட்டர் துறையில் ஆர்மீனிய விஞ்ஞானிகள் குறிப்பிடத்தக்க பணிகளை ஆற்றியுள்ளனர்.

பிரதமர் தொழிற்சாலையை சுற்றிப் பார்த்தார். ஞாபக சக்திக்கான கருவி ஒன்றினை பிரதமர் இந்திராவிற்கு கம்ப்யூட்டர் விஞ்ஞானிகள் பரிசாக கொடுத்தனர்.

ஆனால் இது தேவையே இல்லாத ஒன்று. ஏனெனில் பிரதமரின் இந்த விஜயம் என்றும் மாறாமல் பசுமையாக நெஞ்சில் நிலைத்திருக்கும்.

பிரதமர் இந்திராவுடன் அவரது குடும்பத்தினரும் சென்றனர்.

சஞ்சய் காந்தி அவரது வழக்கமான பைஜாமாவுடனும் குர்தாவுடனும் காட்சி அளித்தார். நடுக்கும் குளிரிலும் அவர் அவ்வித உடையில் இருந்தது வியப்பை அளித்தது.

மற்றவர்கள் மழை கோட்டு அணிந்து குளிரில் இருந்து தங்களை பாதுகாத்து கொண்டனர்.

பிரதமரின் மூத்த புதல்வரான ரஜிவ் காந்தி தமது கேமராவிற்கு நிறைய வேலை கொடுத்தார்.

நேற்று மாலை பிரதமர் இந்திரா தேசிய சாதனை கண்காட்சிக்கு சென்று பார்வையிட்டார்.

நேற்றிரவு ஆர்மீனிய குடியரசு சார்பில் அளிக்கப்பட்ட

2-ம் பக்கம் பார்க்க

## அரசு ஊழியர்களுக்கு புதிய ஊதியக் குழு: என்.ஜி.ஓ.சங்கம்கோரிக்கை

சென்னை, ஜூன் 13—அரசு ஊழியர்களுக்குப் புதிய "ஊதியக் குழு" அமைக்க வேண்டும் என்று தமிழ்நாடு என். ஜி. ஓ சங்கம் கோரிக்கை விடுத்துள்ளது.

என். ஜி. ஓ. சங்கத்தலைவர் சிவ-இளங்கோ இந்தப் புதிய கோரிக்கையை இன்று அறிவித்தார்.

தமிழ்நாடு வேளாண்மைத் துறை கிடங்கு அமைச்சுப் பணியாளர்கள் சங்க முதலாவது மாநாட்டில் சிவ. இளங்கோ பேசியபோது இது பற்றிக் குறிப்பிட்டார்.

இந்த மாநாடு அண்ணா சாலையில் உள்ள மத்திய நூலக கட்டிடத்தில் நடந்தது.

இந்த மாநாட்டை முன்னாள் முதல்வர் பக்தவத்சலம் துவக்கிவைத்தார். மாநாட்டுக்கு சிவ. இளங்கோ தலைமை வகித்தார்.

சம்பளக் கமிஷன் கோரிக்கையை வெளியிட்ட சிவ இளங்கோ கூறியதாவது:—

முக்கியமான நேரத்தில் இந்த மாநாட்டை நாம் கூட்டி இருக்கிறோம்.

மத்திய அரசின் ஊதியக் கமிஷனின் பரிந்துரை 1973-ல் இருந்து மத்திய அரசு ஊழியர்களுக்கு அமல் படுத்தப்பட்டு வருகிறது.

அந்த அடிப்படையில் கேரள மாநிலத்தில் 74-ம் ஆண்டு ஜனவரி முதல் தேதி முதல் அங்குள்ள அரசு ஊழியர்களுக்கு அமல் ஆக்கப்பட்டுள்ளது.

### கேரளத்திற்குப் பாராட்டு

மத்திய அரசு சம்பளக் கமிஷன் சிபாரிசை ஒட்டி கடைநிலை ஊழியர்களுக்கு அடிப்படை சம்பளம் 196 ரூபாயாக அந்த நிலையில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

350 ரூபாய்க்குக் குறைவான சம்பளக்காரர்களுக்கு மத்திய ஊழியர்களின் அதே விகிதம் தரப்படுகிறது.

ஆந்திர மாநிலத்தில் 75-ம் ஆண்டு முதல புதிய விகிதம் தரப்பட்டு வருகிறது. அங்கே கடைநிலை ஊழியர்களுக்கு 300 ரூபாய் தரப்படுகிறது. ஆனால் தமிழ்நாட்டில் கடைநிலை ஊழியர்களின் மொத்த சம்பளம் 215தான்.

### ஊதியக் குழு வேண்டும்

ஆகவே மத்திய அரசு ஊழியர்களுக்கு சமமான சம்பளம் கிடைக்க புதிய ஊதியக்குழு நியமிக்கப்பட வேண்டும்.

### பிளவு தேவையா?

நம்மிடையே பிளவுகள் இருக்கின்றன. 7 லட்சம் ஊழியர்களுக்கு இங்கே 300 சங்கங்கள் இருக்கின்றன.

இதனால்தான் இங்கே நன்மைகள் தாமதமாகின்றன. ஆகவே நாம் எல்லோரும் இணைந்து செயல்பட வேண்டும்.

### பக்தவத்சலம்

விழாவில் பக்தவத்சலம் பேசியதாவது:

உங்கள் கஷ்டம் யாருக்கும்

1-ம் பத்தி பார்க்க

## கிழிந்த ரூபாய் நோட்டுகள்: மாற்றிக்கொள்ள புதுவசதி

பம்பாய், ஜூன் 13—கிழிந்த ரூபாய் நோட்டுக்களை அரசுத் துறையிலுள்ள எல்லா வங்கிகளிலும் கொடுத்து புதிய நோட்டுக்களை பெற்றுக் கொள்ளலாம் என்று இந்திய ரிசர்வ்வங்கி அறிவித்துள்ளது.

அழுக்கடைந்தும், இரண்டாக கிழிந்தும் இருக்கின்ற ரூபாய் நோட்டுக்களை அரசு துறையில் உள்ள வங்கிகளில் கொடுத்து மாற்றிக் கொள்ளலாம்.

தபால் தந்தி அலுவலகங்களிலும், ரெயில்வே அலுவலகங்களிலும்தாங்கள் செலுத்த வேண்டிய தொகைக்கு அழுக்கடைந்த ரூபாய் நோட்டுக்களை செலுத்தலாம்.

நைந்த ரூபாய் நோட்டுக்கள் என்றால் என்ன என்பதற்கு ரிசர்வ் வங்கி விளக்கம் கொடுத்திருக்கிறது.

நைந்த நோட்டுக்கள் அடையாளம் கண்டுகொள்ளத்தக்க வகையில் இருக்க வேண்டும்

ரூபாய் நோட்டுக்களில் காணப்படும் உத்தரவாதம், கவர்னரின் கையெழுத்து ராஜா தலை அல்லது அசோக ஸ்தூபி ஆகியவைகளும் தெளிவாக இருக்க வேண்டும். சின்னம், எண்கள், வரிசை எண், நீர்ஓட்டம் ஆகியவைகளும் தெரிய வேண்டும்.

அழுக்கடைந்த நோட்டுக்கள் என்பதற்கு வங்கிகொடுத்துள்ள விளக்கமாவது:

திரும்ப திரும்ப பயன்படுத்தியதன் காரணமாக ரூபாய் நோட்டுக்கள் அழுக்கடைந்து போயிருந்தால் அவைகளை அரசுத்துறை வங்கிகளில் கொடுத்து மாற்றிக்கொள்ளலாம்.

இரண்டாக கிழிந்து போன நோட்டுக்களில் ரூபாய் நோட்டுக்களின் எல்லா அம்சமும் காணப்பட வேண்டும். அப்போதுதான் அவைகளை வங்கி ஏற்றுக் கொள்ளும்.

சந்தேகம் ஏற்பட்டால் அருகில் உள்ள ரிசர்வ் வங்கிக்கு ஆராய்ச்சிக்காக ரூபாய் நோட்டுக்கள் அனுப்பப்படும்.

# ஏ. எஸ். கே. 70-வது பிறந்த தினம்



சென்னை, ஜூன் 13—தமிழகத்தின் மூத்த தொழிற்சங்கத் தலைவரும், கம்யூனிஸ்ட் கட்சித் தலைவருமான ஏ. எஸ். கே.க்கு இன்று (ஞாயிறு) 70-வது பிறந்த தினமாகும்.

1934-ம் ஆண்டு எம். ஏ. பட்டம் பெற்றுத் தேறிய ஏ. எஸ். கே. நாட்டின் விடுதலை போராட்டத்தால் கவரப்பட்டார். விடுதலைப்போராட்டத்தில் பங்கு கொண்டு 7 ஆண்டுகள் மொத்தம் சிறைவாசம் ஏற்றார். அதன் பின்னர் தொழிலாளர் போராட்டங்களில் பங்கு கொண்டு மொத்தம் 10 ஆண்டுகள் சிறைவாசம் ஏற்றார். 70 வயது நிரம்பிய ஏ. எஸ். கே. மொத்தம் 17 ஆண்டுகள் சிறைவாசம் கண்டவர். அவர் தலைமறைவாக இருந்து செயல்பட்ட காலம் இதில் சேர்க்கப்படவில்லை.

1934ம்ஆண்டு கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்டதால் தொழிலாளர் பாதுகாப்புக் கமிட்டி என்ற அமைப்பில் சிங்காரவேலர், பம்பாயிலிருந்து நாடு கடத்தப்பட்ட எஸ்.வி. காட்டே ஆகியோருடன் இணைந்து பணியாற்றினர்.

தமிழகத்தில் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசை பலம் வாய்ந்த சங்கமாக உருவாக்கியவர்களில் ஏ. எஸ். கே. முன்னணியில் நிற்கிறார். ஜீவா அன்றைக்கு தொழிற்சங்கத்தலைவராகவும் ஏ. எஸ். கே, செயலாளராகவும் பணியாற்றினர். அவர்களுடன் சீனிவாச ராவ், கே. முருகேசன் ஆகியோர் பணி செய்தனர்.

1936-ம ஆண்டு நேருவுக்கும் 1937-ம் ஆண்டு நேதாஜிக்

(6ம் பத்தி பார்க்க)

# விபசாரத்தில் ஈடுபடும் திருமணமானபெண்கள்: மருத்துவ நிபுணர் கவலை

சென்னை, ஜூன் 13—திருமணமான பெண்கள் விபசாரத்தில் ஈடுபடுவது அதிகரித்து வருவது கவலை தரத் தக்கதாகும் என்று பிரபல வைத்திய நிபுணர் டாக்டர் ஆர். வி. ராஜம் தெரிவித்தார்.

உடலுறவு நோய் (வி.டி.) சம்பந்தமாக ஆராய மேக நோய்க்கான இந்திய சங்கம் முதன் முதலாக மாநாடு ஒன்று சென்னையில் நடத்தியது.

பிரபல உடலுறவு நோய் சிகிச்சை நிபுணர் ராஜம் மாநாட்டைத் துவக்கி வைத்தார்.

அப்போது அவர் கூறியதாவது:

உடலுறவு நோயைக்கட்டுப்படுத்துவதில் நாம் பின் தங்கி யிருக்கிறோம்.

இந்தியாவில் உடலுறவு (மேக) நோய் சிகிச்சைக்காக 261 கிளினிக்குகள் உள்ளன. ஆனால் இவைகளில் பல ஏட்டளவிலேயே உள்ளன.

பல டாக்டர்களும் இந்த நோய் சிகிச்சையில் விசேஷ அக்கறை காட்டுவதில்லை. தகுந்த சிகிச்சை கிடைக்காததால் இந்த நோய் அதிகரித்து வருகின்றது.

இந்த நோய் பிடித்தவர்களால் அவர்களின் சந்ததியினரும், சிறு குழந்தைகளும் பாதிக்கப்படுகிறார்கள். இது நாட்டுக்கே அபாயமான நிலைமையாகும்.

மக்கள்தொகை பெருக்கம், கிராமங்களிலிருந்து நகரங்களுக்கு மக்கள் பெருமளவுக்கு குடியேறல், ஆண்-பெண் எண்ணிக்கையில் சம அளவு இல்லாமை, நகரங்களிலும். புண்ணிய ஸ்தலங்களிலும் தினமும் வந்து போகும் மக்கள் ஆகியவைகளே இந்த நோய் பரவுவதற்கு முக்கியகாரணங்களாகும். ஏனெனில் விபசாரம் பெருகுவதற்கு இப்படிச் சூழ்நிலைகள் சாதகமாக அமைகின்றன.

குடிசைகள் பெருக்கம், சுகாதாரக் குறைவு ஆகியவை மேக நோயை பரப்புகின்றன.

## சிவப்பு விளக்கு பகுதி

நகரங்களிலும், புறநகர்ப் பகுதிகளிலும் ரகசியமாக தனிப்பட்ட முறையில் விபசாரம் நடைபெற்று வருகின்றது.

திருமணமான பெண்கள் கூட விபசாரத்தில் ஈடுபடுவது மிகவும் கவலை தரக்கூடிய அம்சமாகும்.

இதைப் பார்க்கும்போது பழைய பாணி விபசார விடுதிகளும் சிவப்பு விளக்குப் பகுதிகளும் பரவாயில்லை என்று சொல்லலாம்.

ஏனெனில் அப்படிப்பட்ட முறைகளால் குறிப்பிட்ட ஒரு பகுதியில் மட்டுமே விபசாரம் கட்டுப்படுத்தப்படுகிறது.

சட்டத்தின் மூலம் விபசாரத்தைக் கட்டுப்படுத்த முடியாது என்று உலகின் பலநாடுகளும் இப்போது உணர்ந்துள்ளன.

வயதுவந்தவர்கள் தனிப்பட்டமுறையில் விரும்பி உடலுறவு கொள்வதை சட்டத்தின் மூலம் ஏன் தடை செய்ய வேண்டும் என்று ராஜம் கேட்டார்.

மாநாட்டுக்கு தலைமை வகித்து கவர்னர் ஷா பேசுகையில் நமது பிரச்சார சாதனங்கள் தவறான உடலுறவு பழக்கங்களுக்கு தூபமிடுகின்றன என்று குற்றஞ் சாட்டினார்.

சினிமா தயாரிப்பாளர்கள் ஆபாச காட்சிகள் இடம் பெறாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார்.

மேல்நாடுகளைக் காப்பி அடிக்காமல் இந்திய கலாச்சாரத்துக்கு முக்கியத்துவம் அளிக்குமாறும் அவர் கேட்டுக்கொண்டார்.

உலக சுகாதார ஸ்தாபன மேகநோய் பிரிவுத் தலைவர் டாக்டர் ஜார்ஜ்காஸ் பேசுகையில் விஞ்ஞான அறிவை தகுந்த முறையில் பயன்படுத்தாததாலேயே மேகநோய் பரவி வருகிறது என்று கூறினார்.

சங்கத் தலைவர் டாக்டர் சவுமினியும் பேசினார்.

சுகாதாரச் செயலாளர் முராரி சிறப்பு மலரை வெளியிட்டார்.

# இந்திராவுக்கு மகத்தான வரவேற்பு

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

விருந்தில் பிரதமர் கலந்து கொண்டார்.

## எழில் கொஞ்சும் ஆர்மீனியா

இயற்கை வனப்பை அள்ளிப் போர்த்திக்கொண்டு எழில் கொஞ்சும் ஆர்மீனிய குடியரசு சோவியத் நாட்டின் தென்மேற்கெல்லையில் அமைந்திருக்கிறது.

காகாசிய மலைத் தொடருக்கு அப்பால் இருக்கும் ஆர்மீனியா தென்கிழக்கு எல்லையில் துருக்கி, ஈரான் நாட்டு எல்லைகள் இருக்கின்றன.

ஆர்மீனிய குடியரசில் 25 லட்சம் மக்கள் இருக்கின்றார்கள். இட்டத்தட்ட 9 லட்சம் மக்கள் யெரவான் நகரில் வசிக்கின்றார்கள்.

ஐரோப்பிய கண்டத்தில் ஒரு பகுதியும் ஆசிய கண்டத்தில் மறு பகுதியுமாக சோவியத் யூனியன் அமைந்துள்ளது. ஆசியாவும் ஐரோப்பாவும் சங்கமமாகும் இடத்தில் ஆர்மீனியா அமைந்திருக்கிறது.

ஆசியாகண்டத்திற்கு உள்ள எல்லா ஒற்றுமைகளையும் கொண்டது ஆர்மீனிய குடியரசு.

ஆனால் அதன் செல்வ செழிப்பையும் அலங்கார கட்டிடங்களையும் பார்ப்பதற்கு அசல் ஐரோப்பியாவே இருப்பதாக தோன்றும்.

மாஸ்கோவில் முக்கியப் பேச்சு வார்த்தைகள் நடத்திய பின்னர் இளைப்பாறுவதற்கு மிகப் பொருத்தமான இடம் ஆர்மீனிய குடியரசு.

பிரதமர் இந்திரா ஆர்மீனிய குடியரசுக்கு வந்ததை முன்னிட்டு யெரவான் நகரமே திரண்டு வந்து அவரை வரவேற்றது மறக்க முடியாத நிகழ்ச்சியாகும்.

## இன்று இந்தியா திரும்புகிறார்

சோவியத் நாட்டில், ஆறு நாட்கள் சுற்றுப் பயணத்தை மேற்கொண்ட பிரதமர் இந்திரா இன்று (13-ந் தேதி) இந்தியா திரும்புகிறார்.

பிரதமர் இந்திரா இந்த மாதம் 8-ந் தேதி சோவியத் நாட்டிற்கு புறப்பட்டுச் சென்றார்.

மாஸ்கோவில் 4 நாட்கள் தங்கி சோவியத் தலைவர்களுடன் முக்கிய பேச்சு வார்த்தைகள் நடத்தினர்.

11-ந் தேதி ஆர்மீனியா குடியரசுக்குச் சென்றார். அங்கு இரண்டு நாட்கள் தங்கி விட்டு இன்று இந்தியாதிரும்புகிறார்.

இன்று யெரவான் நகரில் இருந்து டிப்ளிசி நகருக்கு பிரதமர் வருகிறார்.

அங்கிருந்து ஏர் இந்தியா விமான மூலம் பிரதமர் இந்திரா இந்தியா வந்து சேருகிறார்.

# இத்தாலி தேர்தல்: கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிக்கு வருமா?

ரோம், ஜூன் 13—இத்தாலி நாட்டில் இந்த மாத இறுதியில் பாராளுமன்றத்துக்கு பொதுத் தேர்தல் நடைபெறுகிறது. இந்தத் தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிக்கு வரும் வாய்ப்பு இருக்கின்றது.

ஆனால் எப்படியும் கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிப் பீடம் ஏறுவதைத் தடுத்திட வலதுசாரி சக்திகள் தீவிரமாக முயன்று வருகின்றன. எனவே வலதுசாரிக் கட்சிகளுக்கும் அமெரிக்க உளவு நிறுவனம் (சி.ஐ.ஏ.) நிதி உதவி செய்து இருக்கின்ற விபரம் அண்மையில் அமெரிக்கப் பத்திரிகைகளிலேயே வெளியாகின.

சென்ற ஆண்டு இத்தாலியில் நகராட்சித் தேர்தல்கள் நடந்தன. இந்தத் தேர்தல்களில் கம்யூனிஸ்ட் கட்சி 34 சதவிகிதம் ஓட்டுகள் பெற்றது. வேறு எந்தக் கட்சியும் தனித்தமுறையில் இவ்வளவு ஓட்டுகள் பெறவில்லை.

## கவிழ்ந்தது.

இத்தாலியில் சென்றமாதம் வரை கிறிஸ்துவ ஜனநாயகக் கட்சி தலைமையிலான கூட்டணி ஆட்சி நடந்தது. இந்தக் கூட்டணி ஆட்சியால் மக்களின் எந்தப் பிரச்னைகளுக்கும் தீர்வு காண முடியவில்லை. எனவே கூட்டு மந்திரி சபையிலிருந்து சோஷலிஸ்ட் கட்சி விலகியது. அதனைத் தொடர்ந்து கூட்டணி ஆட்சியும் கவிழ்ந்தது.

மீண்டும் இந்தத் தேர்தலில் கிறிஸ்துவ ஜனநாயகக் கட்சி கம்யூனிஸ்ட் கட்சியை எதிர்த்து தீவிரமாகப் போட்டியிடுகிறது. எந்தக் கட்சியுடன் சோஷலிஸ்ட் கட்சி கூட்டணி அரசாங்கம் அமைத்தாலும் கம்யூனிஸ்ட் கட்சியுடன் சேர்ந்து கூட்டணி அரசு அமைக்க மாட்டோம் என்று கிறிஸ்துவ ஜனநாயகக் கட்சி அறிவித்து இருக்கிறது.

பாசிஸ்ட் கட்சியைத் தவிர வேறு எல்லா ஜனநாயகக் கட்சிகளுடனும் சேர்ந்து விரிந்த அளவில் கூட்டணி அரசு அமைப்பது தான தங்கள் நோக்கம் என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி அறிவித்திருக்கிறது.

இம்மாதம் 20,21 தேதிகளில் இத்தாலியப் பொதுத் தேர்தல் நடைபெறுகிறது. இந்தத்தேர்தலுக்குப்பின்னர் இடதுசாரிக் கட்சிகள் கூட்டணி சேர்ந்தால்தான் நிலையான அரசு அமைக்கமுடியும் என்ற நிலை இருக்கிறது. வலதுசாரிக் கட்சிகள் மீது மக்கள் நம்பிக்கை இழந்துவிட்டனர் என்பதனைத்தான் சென்ற ஆண்டு நடந்த நகராட்சித் தேர்தல் உணர்த்துகிறது.

# கூட்டுறவு அச்சகம்: அதிகாரி நியமனம்

சேலம், ஜூன் 13—சேலம் மாவட்டத்தில் மாவட்ட தி.மு. கழக செயலாளர் வீரபாண்டி ஆறுமுகம் தலைமையில் இருந்த சேலம் மாவட்ட கூட்டுறவு மத்திய வங்கி கலைக்கப்பட்டு தனி அதிகாரி நியமனம் செய்யப்பட்டார் அல்லவா? இதனைத்தொடர்ந்து மாவட்ட கூட்டுறவு அச்சகத்தின் நிர்வாக சபை கலைக்கப்பட்டு இதற்கு தனி அதிகாரி நியமிக்கப்பட்டு பொறுப்பு ஏற்றுக் கொண்டார். இந்த மாவட்ட கூட்டுறவு அச்சகத்தின் தலைவராக இருந்தவர் மாவட்ட தி.மு. கழகத்தின் துணை செயலாளரும், வீரபாண்டி ஆறுகத்தின் வலதுகரமாக விளங்கியவருமான அன்புக்கரசு என்பவராவார்.

இவர் மீது "ஜெயப்பிரகாஷ் நாராயணன் உடல் நிலை சம்பந்தமாக வால்போஸ்டர் அச்சிட்டு நகரம் மற்றும் பல இடங்களில் ஒட்டியதாக வழக்கு ஒன்றும் பதிவு செய்யப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இந்தவால்போஸ்டர் வழக்கில் 'வீரபாண்டி' மற்றும் சிலர் மீதும் குற்றம் சாட்டப்பட்டுள்ளது. சேலம் மாவட்டத்தில் 25 கூட்டுறவு அமைப்புகளுக்கான தனி அதிகாரிகள் பொறுப்பு ஏற்றனர்.

இதேபோல தர்மபுரி மாவட்டத்தில் 13 கூட்டுறவு நிறுவனங்களில் தனி அதிகாரிகள் பொறுப்பு ஏற்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

# சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு பென்ஷன்

புதுடெல்லி, ஜூன் 13—1972-ம் ஆண்டு சுதந்திரப் போராட்ட வீரர்கள் பென்ஷன் திட்டத்தின்படி, கடந்த மாதம் இறுதிவரை ஒரு லட்சத்து 10 ஆயிரத்து 658 சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு பென்ஷன் வழங்க அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. பென்ஷன் கேட்டு மொத்தம் 2லட்சத்து 39 ஆயிரத்து 965 விண்ணப்பங்கள் வந்தன. 2 லட்சத்து 39 ஆயிரத்து 869 விண்ணப்பங்கள் பைசல் செய்யப்பட்டன. சுமார் 82,270 விண்ணப்பங்கள் தள்ளுபடி செய்யப்பட்டன. 46,941 விண்ணப்பங்கள் பரிசீலனைக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டன. 96 விண்ணப்பங்கள் பைசல் செய்யப்படாமல் தேங்கியிருக்கின்றன.

இந்திய தேசிய ராணுவத்தைச் சேர்ந்த 13,342 சிப்பந்திகளுக்கு பென்ஷன் வழங்க அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. இவர்களில் 11,993 பேர் ராணுவத்தைச் சேர்ந்தவர்கள். பாக்கி பேர் சிவிலியன்கள்.

# அரிஜன மக்களுக்கு திருமண மண்டபம்

கும்பகோணம், ஜூன் 13—கும்பகோணம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த தில்லையம்பூர் கிராமத்தில் ரூபாய் 22 ஆயிரம் செலவில் அரிசனங்களுக்கு ஓர் திருமண மண்டபம் கட்டுவதென்று தில்லையம்பூர் பஞ்சாயத்து கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. இத் திருமண மண்டபம் பஞ்சாயத்து யூனியன் சேமிப்பு நிதியிலிருந்து கட்டப்படும்.

கூட்டத்திற்கு பஞ்சாயத்துத் தலைவர் எம். ராமநாதன் தலைமை தாங்கினர்.

# வெளிநாட்டு பிராந்தி கடத்தல்: 3பெண்களுக்கு கடுங்காவல் தண்டனை

விழுப்புரம், ஜூன் 13—பஸ்சில் வெளிநாட்டு மது புட்டிகள் கடத்தியதாக 3 பெண்களுக்கு ஜெயில் தண்டனை கிடைத்தது. கடலூர் திருப்பாப்புலியூரைச் சேர்ந்தவர்கள் ஜெயா (வயது 40), ஜெயலட்சுமி (வயது 32), வி. பார்வதி (வயது 30) இவர்கள் 3 பேர்களும் சேலம் சென்ற பஸ்ஸில் வெளிநாட்டு மது வகையைச் சேர்ந்த மதுபாட்டில்களை கடத்தினர்கள்.

பஸ் உளுந்தூர்பேட்டை அருகே வரும்போது சப் இன்ஸ்பெக்டர் குடியரசுமணி பஸ்ஸை நிறுத்தி சோதனை செய்து அவர்களிடம் இருந்து 24 மது புட்டிகளை கைபற்றி வழக்கு தொடர்ந்தார்.

வழக்கை விசாரணை செய்த உளுந்தூர் பேட்டை 2-வது வகுப்பு ஜுடீசியல் மாஜிஸ்திரேட் ஆறுமுகம் 3 பெண்களுக்கும் 3 மாத கடுங்காவல் சிறை தண்டனை விதித்து தீர்ப்பு வழங்கினர்.

# இந்திய-சோவியத் கலாசார சங்க நிர்வாகிகள்

விழுப்புரம், ஜூன் 12—இந்திய சோவியத் கலாச்சார கழக திண்டிவனம் கிளைக்கு தலைவராக திண்டிவனம் நகரசபைத் தலைவர் ஹீராசந்தும் துணைத் தலைவர்களாக சிவப்பிரகாசம் சம்பத்குமாரும் பொது செயலாளராக முருகேசனும் செயலாளர்களாக குணசேகரன், எத்திராஜனும் பொருளாளராக ராமதாசும் தேர்ந்தெடுக்கபட்டுள்ளனர். பிரதமர் இந்திரா காந்தியின் ரஷிய பயணம் வெற்றி பெற வாழ்த்து தெரிவிக்கப்பட்டது.

1-ம் பத்தி தொடர்ச்சி

கும் சென்னையில் பிரம்மாண்டமான வரவேற்பு அளிக்கப்பட்டது. இதற்குஏற்பாடு செய்தவர் அன்றைக்கு காங்கிரஸ் சோஷலிஸ்ட் தலைவர்களில் ஒருவராக விளங்கிய ஏ. எஸ். கே. தான்.

19 6-ம் ஆண்டு சுதந்திரப் போராட்டத்தின் ஒரு அங்கமாக கப்பற் படை வீரர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். அந்த வேலை நிறுத்தத்திற்கு ஆதரவாக சென்னையில் லட்சம் மக்களைத்திரட்டியவர்கள் ஏ. எஸ். கே.யும் ஜீவாவும் தான்.

இன்றுவரை தன்னை தொழிலாளர் வர்க்கத்திற்காக அர்ப்பணத்திருக்கும் ஏ. எஸ். கே. வுக்கு தனக்குஇன்று(ஞாயிறு) 70-ம் பிறந்த தினம் என்று நினைவு இருக்கிறதோ என்னவோ? ஏனெனில் அவர் பிறந்த தின விழா வெல்லாம் கொண்டாடுவது இல்லை.

ஏ எஸ்.கே. ஆங்கிலத்திலும் தமிழிலும் 10 புத்தகங்களை அறிவுக் களஞ்சியங்களாக எழுதியிருக்கிறார்.




யோகாசன ஆலயம் பூசை கிளை மகாராஜா துறவுநிகழ்ச்சி. நடத்துபவர்: கோ. மு. சுவாமி ஸ்ரீநிவாச பெருமாள் கோயில் வெள்ளாள தெரு, சென்னை 84 காலை 7 மணி

## வரி விளம்பரங்கள்

வைத்தியம்

பழனி டாக்டர் எஸ். காளிமுத்து அவர்களை ஈரோடு 15-ந் தேதி காலை நவபவனம் லாட்ஜ், திருப்பூர் 15-ந் தேதி பகல்—மாலை ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜ். பொள்ளாச்சி 15-ந் தேதி மாலை ஹோட்டல் கீதாஞ்சலி, கோயம்புத்தூர் 16-ந் தேதி காலை — பகல் விஜயா லாட்ஜ் நோயாளிகள் நேரில் சிகிச்சை பெறவும்.

பஸ் மோதியதால்

# சைக்கிளில் சென்றவர் மூளை சிதறி விழுந்தது: ஆசாமி பரிதாபச் சாவு

புதுவை, ஜூன் 13—பஸ் மோதியதால் சைக்கிளில் சென்ற வாலிபர் ஒருவர் மூளை சிதறி அதே இடத்தில் பரிதாபமாகசெத்தார்.

புதுவை அருகே நடந்த இந்த பரிதாப சம்பவம் பற்றி கூறப்படுதாவது:

புதுவையைச் சேர்ந்த 22 வயது வாலிபர் மோகன் தாஸ. இவர், புதுவையை அடுத்த கம்பன் நகரில் வேலை பார்த்துவந்தார். இவருக்கு அடுத்த மாதம் திருமணம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டு வந்தது.

இவர் கம்பன் நகரிலிருந்து சைக்கிளில் புறப்பட்டு அலுவலகத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார். விழுப்புரம் ரோடில், அஜீஸ் நகர் அருகே வந்து கொண்டிருக்கும் போது எதிர்பாராத விதமாக எதிரில் வந்து கொண்டிருந்த வைக்கோல் வண்டியை முந்திச் செல்ல முயன்ற பஸ் ஒன்று இவர் மீது வேகமாக மோதி இழுத்துச் சென்றது.

சிறிது தூரம் இழுத்துச் சென்று ஒரு மின்சார கம்பம் அருகில் நின்ற அந்த பஸ்சுக்கு அடியில் சிக்கிய வாலிபர் மண்டையில் அடிபட்டு மூளை சிதறி அதே இடத்தில் பரிதாபமாக செத்தார்.

இதுகுறித்து தகவல் கிடைத்தவுடன், முதலியார் பேட்டை சர்க்கிள் இன்ஸ்பெக்டர் ராகவன், ரெட்டியார்பாளையம் சப்-இன்ஸ்பெக்டர் என். முனுசாமி ஆகியோர் விரைந்து சென்று பிரேதத்தை கைப்பற்றி விசாரணை நடத்தினர்கள்.

இது தொடர்பாக பஸ் டிரைவர் பழனி (வயது 32) என்பவரை கைது செய்து மேலும் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

# கம்யூனிஸ்ட் கட்சியினர் தோண்டிய கிணறு

தூத்துக்குடி, ஜூன் 13—தூத்துக்குடியில் தண்ணீர் பஞ்சத்தைப் போக்க கம்யூனிஸ்ட் கட்சியினர் நடவடிக்கை எடுத்து வருகின்றனர்.

கீழ ரத வீதியில் பாழடைந்து கிடந்த கிணறு ஒன்றை என். ஜே. குமார் தலைமையில் கம்யூனிஸ்ட் தொண்டர்கள் பாறைகளை உடைத்து சுத்தப்படுத்தி சீர்படுத்தினர்கள்.

இதன்மூலம் இப்பகுதியில் உள்ளவர்களின் தண்ணீர் கஷ்டம் ஓரளவு குறைந்துள்ளது. இச் சேவையை பொது மக்கள் பெரிதும் வரவேற்றுப் பாராட்டினர்கள். குறிப்பாக பெண்கள் மத்தியில் கம்யூனிஸ்ட் கட்சியின் இச் சேவை மிகவும் பாராட்டுதலை பெற்றுள்ளது.

இங்கு வந்த கம்யூனிஸ்ட் கட்சியின் மாவட்ட செயலாளர் வி. எஸ். காந்தியும், கம்யூனிஸ்ட் கட்சியின் பாராளுமன்ற உறுப்பினர் எஸ். ஏ. முருகானந்தமும் கட்சி தோழர்களை மிகவும்பாராட்டி மேலும் இதுபோன்ற பொதுச் சேவையில் ஊக்கத்தோடு செயல்படும்படி கேட்டு, வாழ்த்தினர்கள்.

# பம்பாய் தென் இந்திய ஆதி திராவடர் சங்கம்

பம்பாய். ஜூன் 13—பம்பாய் தென்னிந்திய ஆதி திராவிடர் மகாசன சங்கம் பொது உறுப்பினர் கூட்டம் தாராவி, ராமர்வாடியில் நடந்தது.

1976—1977-ம் ஆண்டிற்காக நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தலைவராக எஸ். எஸ். அன்பழகன். துணைத்தலைவராக ஓ. ஏ. பாலையா, பொதுச் செயலாளராக எம். ஏ. ஜெகந்நாதன் துணைச்செயலாளராக கே. எம். சிவராஜ் பொருளாளராக கே. எம். செல்வராஜ் ஆகியோரும் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக 14 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.




## வாழ வழிகேட்கும் 700 ஆசிரியர்கள்

ஐயா,— தமிழ்நாட்டில் தொடக்க நிலை (ஊளநிலை) ஜூனியர் ஹையர்கிரேடு ஆசிரியர், ஆசிரியை, நான் பேசிக், பேசிக் இரண்டுஆண்டு கள்பயிற்சிப்பள்ளியில்பயிற்சிப் பெற்றூர்கள். அவர்களில் 700-க்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் ஒரு குருப் பாடங்களில் தேர்வு எழுதி தவறியவர்களாவார்கள் இவர்களை 1974-ம் ஆண்டு ஏப்ரலுக்கு முன்னால் தமிழ் நாட்டில் உள்ள 374 ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளிகளில் இளநிலை ஆசிரியர்களாக நியமனம்செய்தார்கள்

1974-ஆம்ஆண்டுக்கு பிறகு தேர்வு எழுதி தவறிய ஆசிரியர்களை அரசு உத்தரவுபடி பதவி நீக்கம் செய்துவிட்டார்கள். ஒரு பாடத்தில் தேர்வு தவறியவர்கள் தவறிய பாடத்தை எழுத இளநிலை ஆசிரியர்கள் தேர்வை இனி இல்லையென அரசினர்நிறுத்து விட்டார்கள்.

இந்த 700 பேர்களும் எந்த வேலைக்கும் போகவில்லை எந்த வேலையுமின்றி அவதிப் படுகிறார்கள்

இந்நிலையில் இளநிலை ஆசிரியர்கள் உடைய இடத்திற்கு முதுநிலை சீனியர் கிரேடு ஆசிரியர்களை தமிழ் நாட்டில் உள்ள 374 ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளியில் நியமனம் செய்ய இருக்கிறார்கள்.

1976ஆம் ஆண்டு ஜூன் மாதம் பள்ளி திறந்தபின் தமிழ் நாட்டில் உள்ள 374 ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளிகளுக்கு இளநிலை ஆசிரியர் ஓய்வுபெற்ற இடத்திற்கு இளநிலை தேர்வு தவறிய ஆசிரியர்களையே நியமனம் செய்யவும் இரண்டாண்டு பயிற்சி பள்ளியில் பயிற்சி பெற்று தேர்வு எழுதி தவறியவர்களுக்கு மேலும் இரண்டாண்டுகளுக்கு இளநிலை ஆசிரியர்களுக்கு தேர்வு எழுத அனுமதியும, வழங்க தமிழ் நாடு தொடக்கநிலை (இளநிலை) பயிற்சிபெற்று தேர்வு தவறிய ஆசிரியர்கள் சங்கம், தமிழக ஆளுநர் அவர்களையும், தமிழக கல்வி இயககுநர் அவர்களையும், இனநிலை ஆசிரியர்களுக்கு தேர்வு எழுத அனுமதி ஏற்படுத்தித் தரும் படி வேண்டிக் கேட்டுக் கொள்கிறது.

கே. வி. குழந்தைவேலு,
மாநிலத் தலைவர்.
தமிழ்நாடு தொடக்க நிலை
பயிற்சி பெற்று தேர்வு
தவறிய ஆசிரியர்கள் சங்கம்
கலங்காணி அஞ்சல்
வழி; காரைக்குறிச்சி,
நாமக்கல் வட்டம்
சேலம் மாவட்டம்.

## பொது வாழ்வை சுத்தமாக்க

# கழகம் அமைக்க கவர்னர் திட்டம்



### கண்ணில் நீர் மல்க விடைபெற்றார்

சென்னை, ஜூன் 13—பொது வாழ்வைத் தூய்மைப்படுத்த கழகம் ஒன்றை ஏற்படுத்த தாம் எண்ணியிருப்பதாக கவர்னர் கே. கே. ஷா நேற்று அறிவித்தார்.

கவர்னர் பதவியிலிருந்து ஓய்வு பெறும் ஷாவுக்கு நேற்று சென்னையில் பல பிரிவுபசார நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் வேந்தராக கவர்னர் ஷா இருந்து வருகிறார்.

அவருக்கு பல்கலைக்கழக செனட் ஹாலில் பிரிவுபசாரம் நடத்தப்பட்டது.

தமக்கு அளிக்கப்பட்ட பாராட்டுரைக்குப் பதிலளித்துப் பேசுகையிலேயே ஷா மேற்கண்டவாறு கூறினார்.

அப்போது அவர் மேலும் கூறியதாவது:—

கல்வியில் செய்யப்படும் முதலீட்டுக்குத் தக்க பலன் கிடைக்கிறதா என்பதை கல்வி நிபுணர்கள் ஆராய வேண்டும்.

பொது வாழ்க்கையில் ஒழுங்குக் கட்டுப்பாடு, தரம் ஆகியவற்றை உயர்த்த அமைப்பு ஒன்றை ஏற்படுத்த எண்ணியுள்ளேன். இந்த அமைப்புக்கு பிரதமரின் ஆதரவையும் வினோபாவின் ஆசியையும் கோரப் போகிறேன்.

#### புத்தகம்

ஓய்வு பெற்றபின் கிராம மக்களின் பிரச்சினைகள் பற்றி புத்தகம் ஒன்றை எழுதலாம் என்று எண்ணியிருக்கிறேன் என்று கவர்னர் ஷா பேசினார்.

கவர்னரின் பணிகளை துணை வேந்தர் மால்கம் ஆதிசேஷய்யா பாராட்டிப் பேசினார்.

சிண்டிகேட் உறுப்பினவர் திருமதி ராஜம்மாள் தேர்தாஸ், சாந்தப்பா பல்கலைக் கழக ரிஜிஸ்திரார் குமாரசாமி, மாணவர் ஜெயராம் பட் ஆகியோரும் கவர்னரைப் பாராட்டிப் பேசினார்கள்.

பல்கலைக் கழகத்தின் நினைவாக காந்திஜியைப் பற்றியும், சர்வோதயத்தைப் பற்றியும் எழுதப்பட்ட இரண்டு புத்தகங்கள் ஷாவுக்கு வழங்கப்பட்டன.

தமக்கு அளிக்கப்பட்ட பாராட்டுக்கு நன்றி தெரிவிக்கையில் ஷா உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார்.

அவ்வப்போது கண்ணீரை தனது கைக் குட்டையால் துடைத்துக் கொண்டார்.

#### தமிழக பத்திரிகைகள்: கவர்னர் பாராட்டு

தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் என்னுடைய செய்திகளை தவறாக வெளியிட ஒருமுறை கூட முயன்றதில்லை என்று கவர்னர் ஷா பெருமிதத்துடன் கூறினார்.

சென்னை நிருபர்கள் சங்கம் அளித்த பிரிவுபசாரவிழாவில் கவர்னர் கலந்துகொண்டு பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:

பொதுவாக தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் மிக உயர்ந்த தரத்தை எட்டியுள்ளன.

நான் கவர்னராகப் பதவி ஏற்ற முதல் 6 மாதங்கள் எனக்கு சோதனைக் காலமாக இருந்தன. எனக்கு ஏற்பட்ட நெருக்கடியான சோதனைக் காலங்களில் அதுவும் ஒன்று. அப்படிப்பட்ட காலத்திலும் பத்திரிகைகள் எனக்கு உதவியாக இருந்தன என்றார் கவர்னர்.

தமிழ்நாட்டு மக்களின் மனத்தில் என்னைத் தாழ்த்தக் கூடிய எதையும் நான் செய்ய மாட்டேன் என்று மக்களுக்கு அவர் செய்தி தெரிவித்தார்.

நிகழ்ச்சிக்கு நிருபர்கள்

(4-ம் பக்கம் பார்க்க)

### செவ்வாய் கிழமை பம்பாய் பயணம்

செவ்வாய்க்கிழமை இரவு 7-25 மணிக்கு கவர்னர் ஷா பம்பாய்க்கு ரெயிலில் புறப்படுகிறார்.

அதற்கு முன்பு அன்றுமாலை 5-30 மணிக்கு ராஜாஜி ஹாலில் அரசாங்க சார்பில் அவருக்கு தேநீர் விருந்து அளிக்கப்படும்.

பம்பாயில் 'வசிட டெல்லி' என்ற தனது இல்லத்தில் ஷா தங்குவார்.

### தொழிற்சங்க முகவரி மாற்றம்

மதுரை, ஜூன் 13— தமிழ்நாடு தேசிய பொதுப் பணித் துறை தொழிலாளர் சங்க அலுவலகம் கடந்த வியாழக்கிழமை (10-6-76)லிருந்து "34 மேலச்சித்திரை வீதி மதுரை625001"க்கு மாற்றப்பட்டுள்ளது என்று அந்த சங்கத்தின் பொதுச் செயலாளர் சி. ராமகிருஷ்ணன் அறிவித்துள்ளார்.

#### புதுவை லட்சியம்

## 7 ஆயிரம் பேருக்கு கருத்தடை சிகிச்சை: சேத்திலால் அறிவிப்பு

புதுவை, ஜூன் 13—குடும்பக் கட்டுப்பாட்டு திட்டத்தை மக்களிடையே பரப்புவதற்கு பொது மக்களிடையே சந்தேகமோ எதிர்ப்போ இல்லாதவகையில் நாம் செயல்படவேண்டும் என்று புதுவை கவர்னர் சேத்திலால் பேசினார்.

குடும்ப நலத் திட்டத்தை தீவிரப்படுத்தும் பொருட்டு அது குறித்து விவாதிக்க, புதுவை ராஜ் நிவாசில் நடைபெற்ற, அரசியல் கட்சித் தலைவர்கள், நகரசபை, கொம்யூன் பஞ்சாயத்துத் தலைவர்கள், சமூக சேவை நிறுவனத்தைச் சேர்ந்தவர்கள் மற்றும் அரசு அதிகாரிகள் அடங்கிய கூட்டத்தில் பேசுகையில் அவர் இவ்வாறு கூறினார்.

அவர் மேலும் கூறியதாவது:

இத்திட்டத்தை தீவிரமாக பரப்புவதற்கு மக்களிடையே நெருங்கிய தொடர்புடைய இத்தலைவர்களது தீவிர ஒத்துழைப்பை நான் பெரிதும் எதிர் பார்க்கிறேன்.

புதுவை அரசு சுகாதார இலாகா இம்மாதம் (ஜூன்) 20ந் தேதியிலிருந்து 3 மாதங்களுக்கு தீவிர குடும்பக் கட்டுப்பாடு இயக்கம் ஒன்றை நடத்த திட்டமிட்டுள்ளது. நாம் இதில் பூரண வெற்றி காணமுடியும்.

இத்தீவிர இயக்கத்தினால் 5 ஆயிரத்து 390 பேருக்கு கருத்தடை அறுவை சிகிச்சை செய்யவேண்டும் என்று மத்திய அரசு இலக்கு விதித்திருந்த போதிலும், நாம் அதையும் மீறி 7 ஆயிரத்து 300 பேருக்கு அறுவை சிகிச்சை செய்ய உத்தேசித்துள்ளோம் என்றார்.

கூட்டத்தில் காங்கிரஸ் பொதுச் செயலாளர் பி. சண்முகம், கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் டாக்டர் என். ரங்கநாதன், அண்ணா தி. மு. க. அமைப்பாளர் டி. ராமச்சந்திரன், புதுவை நகராட்சி துணைத் தலைவர் சரஸ்வதி சுப்பையா, காரைக்கால் நகராட்சி தலைவர் கோவிந்தராஜ், உழவர்கரை கொம்யூன் பஞ்சாயத்து தலைவர் கவி. வெ. நாராயணசாமி, டி. ஆர். பட்டினம் கொம்யூன் பஞ்சாயத்து தலைவர் அம்து ஒலி, வில்லியனூர் கொம்யூன் பஞ்சாயத்து தலைவர் நாராயணசாமி கவுண்டர் ஈ. எஸ். பார்த்தசாரதி, மற்றும் அரசு அதிகாரிகள், புதுவை கலெக்டர் டி. சி. ஏ. ரங்கதுரை, போலீஸ் ஐ ஜி. டி. ஆர். கக்கர் மற்றும் பலர் கலந்துகொண்டு பேசினார்கள்.

குடும்பக் கட்டுப்பாட்டை வலியுறுத்தி புதுவை மாநிலத்தில் 3 மாத தீவிர இயக்கம் வருகிற 20-ந்தேதி தொடங்குகிறது.



இந்த குடும்ப நலத்திட்ட தீவிர இயக்கத்தின்போது அறுவை சிகிச்சை செய்து கொள்பவர்களுக்கு ஊக்கத் தொகை அதிகரிக்கப்பட்டுள்ளது.

2 குழந்தைகள் மட்டும் உள்ளவர்கள் குடும்பக்கட்டுப்பாடு செய்து கொண்டால் ரூ. 100 இலவசமாக வழங்கப்படும் என்றும் 3 குழந்தைகள் உள்ளவர்களுக்கு ரூ. 50ம், 4 குழந்தைகளுக்கு அதற்கு மேலும் உள்ளவர்களுக்கு ரூ. 25-ம் வழங்கப்படும். இது தவிரவேறு பல சலுகைகளும் அளிக்கப்படும்.

#### புதுச் சலுகை

இத் தீவிரதிட்டத்தின் பலனாக, சுமார் 1000 பேரைக் கொண்ட கிராமங்களிலுள்ளவர்கள் யாரும் ஓராண்டுக்கு குழந்தை பெற்றுக் கொள்வதில்லை என்று கூறி அதனை கடைப்பிடித்தால், அந்த கிராமத்துக்கு வேண்டிய ரோடு, விளக்கு போன்ற எல்லா வசதிகளையும் செய்து கொடுப்பதில் அரசு முன்னுரிமை வழங்கும்.

### மேயர் மீனாட்சி: வரிவிலக்கு கோரிக்கை

பெங்களூர், ஜூன் 13—மேயர் மீனாட்சி படத்திற்கு வரிவிலக்கு அளிக்கவேண்டும் என்று பெங்களூர் இருபதாவது வட்ட இளைஞர் காங்கிரஸ் தலைவர் டி. பொன்னுசாமி கருநாடக நிதி அமைச்சர் கோர்வடேயைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

ஒரு மேயர் எப்படிச் செயல்படவேண்டும் என்பதையும் தாழ்த்தப்பட்ட மக்களின் பெருமையை உணர்த்தும் வகையிலும் மேயர் மீனாட்சி படம் அமைந்து இருக்கிறது. மேலும் பிரதமரின் இருபது அம்சத் திட்டத்தினையும் இந்தப் படம் விளக்குகிறது. எனவே இந்தப்படத்திற்கு வரிவிலக்கு அளிக்கவேண்டும் என்று டி. பொன்னுசாமி கேட்டுக் கொண்டு இருக்கிறார்.

## சோவியத்தில் அமெரிக்க புத்தகங்கள்; திரைப்படங்கள்

மாஸ்கோ. ஜூன் 13—அமெரிக்க எழுத்தாளர்கள் 300 பேர்களும், பிரிட்டன் எழுத்தாளர்கள் 150 பேர்களும் எழுதிய புத்தகங்கள் சோவியத் யூனியனில் இந்த ஆண்டு வெளியிடப்பட்டு இருக்கிறது.

150 பிரெஞ்சு எழுத்தாளர்கள் எழுதிய நூல்களும் சோவியத் யூனியனின் பல்வேறு மொழிகளில் வெளியிடப்பட்டிருக்கின்றன.

இந்த ஆண்டுமட்டும்சோவியத் யூனியன் ஆயிரத்து 500 வெளிநாட்டு எழுத்தாளர்களின் நூல்களை பல்வேறு மொழிகளில் வெளியிடுகிறது. 6 கோடிப் பிரதிகள் அச்சடிக்கப்படும்.

130 வெளிநாட்டு எழுத்தாளர்களின் எழுத் தோவியங்கள் சோவியத் நாடக அரங்குகளில் நாடகங்களாக நடைபெற இருக்கின்றன.

கடந்த 2 ஆண்டுகளில் 10 அமெரிக்கத் திரைப்படங்கள், 14 பிரெஞ்சுப் படங்கள், 7 இத்தாலிப் படங்கள் சோவியத் யூனியனில் திரையிடப்பட்டிருக்கின்றன. ஆனால் அமெரிக்காவில் ஒரு சோவியத் படம் கூட சென்ற ஆண்டு திரையிடப்படவில்லை.

அமெரிக்க எழுத்தாளர்களின் புத்தகங்களை சோவியத் மக்கள்படிப்பதைக் கண்டு சோவியத் அரசு அச்சம்கொள்வதில்லை. ஆனால் சோவியத் புத்தகங்களை அமெரிக்கர்கள் படித்தால் 'கெட்டுப் போய்விடுவார்கள்' என்று அமெரிக்க அரசு அஞ்சுகிறது.

## சச்சுவிடம் முத்துராமன் கொஞ்சல்




சந்துரு தன் அலுவலகத்தில் வேலை செய்யும் எல்லாப் பெண்களும் ஒழுங்காக வேலை செய்யாததைக் கண்டு மனம் குமுறுகிறான்.

அப்போது அங்கே வரும் சந்துருவின் காரியதரிசியான மைக்கேல் "பெண்களிடம் எரிந்து விழக்கூடாது சார், இனிமையாகப் பேசணும், அப்போது தான் காரியத்தை சாதிக்கலாம்" என்று ஆலோசனை கூறுகிறான்.

அந்த சமயத்தில் "அந்த பெங்களூர் டிரங்க்கால் கிடைக்கலே சார்' என்று அதட்டலாகக் கூறியபடி சந்துருவின் அறைக்குள் நுழைகிறாள் டெலிபோன் ஆபரேட்டர் தாரா.

"உன் குரல் ரொம்ப இனிமையாக இருக்கே. குயில் மாதிரி குரலை ஆண்டவன் உனக்குக் கொடுத்திருக்கான். எம். எல். வசந்தகுமாரி கிட்டே நீ பாட்டை கற்றுக்கிட்டா பர்வீன் சுல்தானாவையும் இசையில் மிஞ்சலாம்" என்று அவளைக் கொஞ்சத் தொடங்குகிறான் சந்துரு.

'என் குரல் அவ்வளவு இனிமையாகவா சார் இருக்கு? கொஞ்சம் இருங்க. பெங்களூர் டிரங்க்கால் கிடைக்குதான்னு பார்க்கிறேன்' என்று தன் அறைக்குஓடுகிறாள் தாரா.

இப்படியொரு காட்சி ஜே. எம். புரொடக்ஷன்ஸ் 'அதிர்ஷ்டம் அழைக்கிறது' படத்திற்காக ஏவி.எம்.ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

சந்துருவாக முத்துராமனும், தாராவாக குமாரி சச்சுவும், காரியதரிசி மைக்கேலாக புது நகைச்சுவை நடிகர் ராஜப்பாவும் நடிக்க செல்வராஜ் ஒளிப்பதிவு செய்தார்.

தேங்காய் சீனிவாசன்—சௌகார் ஜானகி, ஸ்ரீவித்யா, ஜெயசுதா, சுந்தரராஜன், விஜயகுமார், மகேந்திரன் ஆகியோர் நடிக்கும் இப்படத்தின் கதை—வசனம்—பாடல்களை வாலி எழுத வி. குமார் இசையமைக்கிறார்.

ஏ. ஜெகந்நாதன் டைரக்ட் செய்கிறார்.



'இதய மலர்' படத்தில் விஜயகுமார், சுஜாதா

### எம். ஜி. ஆர். நடிக்கும் படம் பாடல் ஒலிப்பதிவு

எம்.ஜி ஆர். நடித்துவரும் ஜேயார் மூவீஸ் படத்திற்கு வாலி எழுதிய பாடல் ஒன்று வாகினியில் ஒலிப்பதிவாகியது. எம்,எஸ். விஸ்வநாதன் இசையில் டி.எம். சௌந்தரராஜன் பாடியுள்ளார்.

தன் காதலியிடம் மக்கள் திலகம் எம், ஜி. ஆர். பாடும் பாடலாக படமாக்கவிருக்கிறார்கள்.

பறக்கும் பைங்கிளி சிரிக்கும் பூங்கொடி
வலைக்குள் ஏன்வீழ்ந்ததம்மா?
மயக்கும் மாலையில் தவிக்கும் வேளையில்
துணைக்கு நான் தேவையம்மா
அஞ்சி அஞ்சி இள வஞ்சி வந்து எனைக்
கெஞ்சி கெஞ்சித் தொடச் சொன்னால் தொடலாமோ?

ஜேயார் மூவீஸ் புதிய வண்ணப்படத்தில் மக்கள் திலகம் எம். ஜி. ஆர். லதா, புது முகம் சங்கீதா, நம்பியார், பண்டரிபாய் மற்றும் பலர் நடிக்கிறார்கள்.

ஒலிப்பதிவை பாலகிருஷ்ணன் கவனிக்கிறார்.

பொதுஜனத் தொடர்பை கிளாமர் கிருஷ்ணமூர்த்தி கவனிக்கிறார்.

பி. கே. வி. சங்கரன்—ஆறுமுகம் சகோதரர்கள் தயாரித்துவரும் இப் படத்தின் கதை, வசனம், டைரக்ஷனை ஸ்ரீதர் கவனிக்கிறார்.

எஸ். எஸ். கே. பிலிம்ஸ் 'வாழ்வு என் பக்கம்' படத்தில் முத்துராமன், லட்சுமி.

★ உங்கள் கேள்விகளுக்கு ★

## ஜெய்சங்கர் பதில்கள்

'நவமணி' வாசகர்களின் கேள்விகளுக்கு நடிகர் ஜெய்சங்கர் அளித்த பதில்கள் இங்கு தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. இந்தப் பகுதி தொடர்ந்து மாதம் ஒரு முறை வெளிவரும்.

### எம். ஜி. ஆர்., - சிவாஜி பற்றி கருத்தென்ன?

கேள்வி: எம். ஜி. ஆருடன் நடிக்க உங்களுக்கு அழைப்பு வந்தால் அதனை ஏற்று நடிப்பீர்களா?

ஜெய்சங்கர்: தகுந்த கதாபாத்திரம வந்தால் நிச்சயமாக ஏற்று நடிப்பேன்.

கேள்வி: எம். ஜி. ஆர்., சிவாஜி கணேசன் இருவரைப் பற்றியும் தங்கள் கருத்தென்ன?

ஜெய்சங்கர்: அவர்கள் என்னை விட அனுபவம் வாய்ந்த பெரிய நடிகர்கள். அவர்களிடமிருந்து பல விஷயங்களைக் கற்றுக்கொண்டிருக்கிறேன.

கேள்வி: நீங்கள் இரட்டை வேடமேற்று நடித்த முதல் படம் 'ஒரே தந்தை' தானே?

ஜெய்சங்கர்: நான் நடித்த இரண்டாவதுபடமான 'பஞ்சவர்ணக் கிளி'யில் முதன்முதலில் இரட்டை வேடம் ஏற்று நடித்திருக்கிறேன்.

கேள்வி: ரசிகர்களைப் பற்றித் தங்கள் கருத்தென்ன?

—ஏ. சி. குமார், இராஜபாளையம்.

பதில்: ரசிகர்கள்தான் எனது அஸ்திவாரம்.

கேள்வி: நீங்களும் எம். ஜி. ஆரும்சேர்ந்து நடிக்காமலிருப்பதற்கு காரணம் என்ன?

பதில்: தகுந்த சந்தர்ப்பமும் காலமும் ஒத்துவராததுதான் சரியான காரணம்.

### எந்தக் கட்சியில் உறுப்பினர்?

கேள்வி: நீங்கள் எந்தக் கட்சியில்உறுப்பினராக இருக்கிறீர்கள்?

—ஏ. பி. மணி, நாமக்கல், சேலம்.

பதில்: இதுவரையிலும் எந்தக் கட்சியிலும் இருந்ததில்லை; இப்போதும் இருக்கவில்லை.

கேள்வி: ஜெய்சங்கர் அவர்களே உங்களுக்கும் எம். ஜி. ஆருக்கும் தகராறாமே? உண்மையாகவா?

—ஏ. எம். ரஷீத். திருவண்ணாமலை.

பதில்: தகராறா...? நிச்சயமாக இல்லை.

கேள்வி: ரசிகர்களின் கடிதங்களைப் படிக்கும்போது என்ன நினைப்பீர்கள்? அதை உள்ளூற வரவேற்கத்தானே செய்வீர்கள்?

ஜி. சந்திரபாபு தம்பதிகள் பொன்னேரி.

பதில்: நிச்சயம் எந்த நடிகராக இருந்தாலும் வரவேற்கத்தான் செய்வார்கள். ரசிகர்களின் கடிதங்கள் என்னைப் போன்றவர்களுக்கு முகம் பார்க்கும் கண்ணாடியைப் போல்.

கேள்வி: தமிழ்த் திரைப் படங்களில் தங்களுக்குப் பிடித்த சிரிப்பு நடிகை யார்?

பதில்: மனோரமா!

கேள்வி: ஜெய் அவர்களே தமிழகத்தின் இரு பெரும் நடிகர்களான எம். ஜி. ஆர்., சிவாஜியைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூறுங்கள்.

சோலை: ஜே. கே. ஷரீப் ஜோலார்பேட்டை.

பதில்: ஒருவர் மக்கள் திலகம், இன்னொருவர் நடிகர் திலகம்.

### நடிகைகளுக்கு சிபாரிசு செய்வது உண்மையா?

கேள்வி: தாங்கள் ஒருசில நடிகைகளுக்கு சிபாரிசு செய்வது உண்மையா?

எம். ஜி. ஆர். மூர்த்தி கச்சேரி ரோடு, கள்ளக்குறிச்சி

பதில்: திறமையுள்ள நடிகைகளுக்குமட்டுமல்ல திறமை மிகுந்துள்ள எவருக்கும் என்னால் இயன்றவரை உதவுகின்றேன். அவர்களுக்கு வாய்ப்பளிக்க முயற்சிக்கின்றேன்.

# “இந்தியாவுடனான ஒத்துழைப்பு என்பது எமது மாறாத கொள்கை”

## —லியனித் பிரஷ்னேவ் கருத்து—

இந்தியப் பிரதமர் திருமதி காந்தியைக் கௌரவிக்கும் வகையில் கிரெம்ளின் மாளிகையில் நடைபெற்ற விருந்தின்போது, சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி மத்தியக் கமிட்டியின் பொதுச் செயலாளர் லியனித் பிரேஷ்னேவ் அரியதொரு உரை நிகழ்த்தினார். “இந்தியாவுடனான அரசியல், பொருளாதார ஒத்துழைப்பு, சோவியத் யூனியனின் மாறாத கொள்கையாகும்” என்று சோவியத் கம்யூனிஸ்டுக்

### யூரி யூரியேவ்

கட்சியின் 25வது காங்கிரஸில் தாம் கூறியதை அவர் மீண்டும் வலியுறுத்தினார்.

ஒரு பெரிய ஆசிய நாட்டின் தலைவரும் சோவியத் யூனியனின் சீரிய நண்பருமான திருமதி காந்தியை வரவேற்றுப் பேசுகையில், இந்தியப் பிரதமரின் விஜயமானது இரு நாடுகளுக்கும் இடையே எல்லாத் துறைகளிலுமுள்ள ஒத்துழைப்பை மேலும் உயர்த்துவதில் ஒரு முக்கிய கட்டமாகும் என்று திடநம்பிக்கையுடன் லியனித் பிரஷ்னேவ் கூறினார்.

### நல்லுதவி நல்கியது

இந்த நம்பிக்கையானது, சோவியத்-இந்திய உறவுகளின் வெற்றிகரமான வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டதாகும்; கிரெம்ளினில் திருமதி இந்திரா காந்தி குறிப்பிட்டது போல, இந்த உறவுகள் காலத்தின் சோதனையில் தேறியுள்ளன; மாறுபட்ட சமுதாய அமைப்புள்ள நாடுகளுக்கு இடையேயான நல்லுறவுகளுக்கு ஓர் உதாரணமாக இவை விளங்குகின்றன.

இந்தியாவின் தேவைகளைச் சோவியத் யூனியன் எப்பொழுதும் நன்கு புரிந்து கொண்டுள்ளது; காலனி ஆதிக்கத்தின் விளைவாக ஏற்பட்ட இன்னல்களை அகற்றி, பொருளாதார சுதந்திரத்தை நோக்கி நவஇந்தியா விரைவில் முன்னேறுவதற்கு சோவியத் யூனியன் பேருதவி புரிந்துள்ளது. சோவியத் உதவியுடன் நிறுவப்பெற்ற பொதுத்துறையானது, தேசப் பொருளாதாரத்தை வளர்ப்பதில் இந்திய அரசின் பேராயுதமாக விளங்குகிறது.

இந்தியாவின் பொதுத் துறையை நிறுவ வேண்டும் என்ற கொள்கை வழியை ஜவாஹர்லால் நேரு வகுத்தார்; இந்திய தேசியக் காங்கிரஸ் அதை நிறைவேற்றி வருகிறது; அந்த வழியானது இப்பொழுது நற்பயன்களை அளித்து வருகிறது.

இந்திய தேசியக் காங்கிரசினது இந்தக் கொள்கையின் தொலை நோக்கை, லியனித் பிரஷ்னேவ் மிக உயர்வாக மதிப்பிட்டார்; இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்தை வளர்ப்பதற்குத் தனலான முயற்சிகளை சோவியத் யூனியன் தொடர்ந்து மேற்கொள்ளும் என்று அவர் வலியுறுத்தினார்.

உள்நாட்டு, அயல்நாட்டுப் பிற்போக்குச் சக்திகளுக்கு எதிரான இந்திய அரசின நடவடிக்கைகள் சோவியத் யூனியனில் முழுமையாகப் புரிந்து கொள்ளப்படுகின்றன என்று லியனித்பிரஷ்னேவ் கூறினார். பிற்போக்குச் சக்திகளின் தாக்குதலை இந்தியாவிலுள்ள எல்லா ஜனநாயக சக்திகளும் உறுதியாக முறியடித்தன. சமுதாய-பொருளாதாரமாற்றங்களுக்கான இந்திய அரசின் 20 அம்சத் திட்டத்தை அமல் நடத்துவதற்கான முன்தேவைகளை இது உருவாக்கியுள்ளது என்று அவர் குறிப்பிட்டார்.

### இந்திராவின் பாராட்டு

கிரெம்ளினில் தமது உரையின் போது, தொழில் வளர்ச்சி, விஞ்ஞானம், தொழில் நுட்பம், விண்வெளியை வெற்றி கொள்ளுதல் ஆகிய துறைகளில் சோவியத் யூனியனின் மகத்தான சாதனைகளைத் திருமதி இந்திரா காந்தி பாராட்டினார். சோவியத் யூனியனின் சாதனைகள், புதிதாக விடுதலை பெற்ற நாடுகளுக்கு உத்வேகமளிக்கின்றன என்ற அவரது பாராட்டு, சோஷலிசத்தின் மாபெரும் ஆக்க சக்திக்குக் கிட்டிய அதி

சோவியத் நாட்டுக்கு விஜயம் செய்த பிரதமர் இந்திராவை அந்த நாட்டு கம்யூனிஸ்ட் தலைவர் பிரஷ்னேவ் விமான நிலையத்தில் வரவேற்கும் காட்சி.

# சமாதானத்தைப் பேணிக் காக்கும் நட்புறவு

—: கிருஷ்ணராவ் :—

பதற்றநிலைத் தணிவுப் போக்கை நீடித்து நிலைக்கச் செய்தல், அதனை உலகின் பல பகுதிகளுக்கும் விரிவுபடுத்துதல். பல்வேறு சர்வதேசப் பிரச்சினைகள் குறித்து இரு நாடுகளது கருத்துக்களையும் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் புரிந்துகொண்டு பாராட்டுதல், இரு நாடுகளுக்கும் இடையே நெருங்கிய ஒத்துழைப்பையும், நட்புறவையும் வளர்க்கவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துதல்—ஆகிய இவைதான் இந்தியா, சோவியத் யூனியன் தலைவர்களது பேச்சு வார்த்தைகளின் அடிப்படையாக அமைந்துள்ளது. நடைபெறும் பேச்சுவார்த்தைகளின் பயனாக, இரு நாடுகளுக்கிடையேயான உறவுகள் புதியதொருமட்டத்திற்கு உயர்த்தப்படும் என்று எவரும் உறுதியாகக் கூறலாம்.

இதனை திருமதி காந்தி, திரு பிரஷ்னேவ் ஆகிய இருவரது பேச்சுக்களிலிருந்தும் எவரும் தெரிந்து கொள்ள முடிகிறது. சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி மத்திய கமிட்டியின் பொதுச் செயலாளர் லியனித் பிரஷ்னேவும் பிற சோவியத் தலைவர்களும் சமாதானம் தழைக்கப் பாடுபடுவதைப் பாராட்டினார் இந்திராகாந்தி. பிரஷ்னேவோ இந்தியாவின் கூட்டுச் சேராக் கொள்கையையும், தெற்கு ஆசியப் பகுதியில் நாடுகளிடையேயான உறவுகளைச் சகஜப்படுத்த இந்தியா மேற்கொள்ளும் நடவடிக்கைகளையும் பாராட்டினார்.

### பதற்றநிலைத் தணிவு

பதற்ற நிலைத் தணிவைப் பொறுத்த அளவில் இரு தலைவர்களுமே ஒருமுகமான கருத்தைத் தெரிவித்தனர். “பதற்ற நிலைத் தணிவுப் போக்கு தற்போது சில சங்கடங்களுக்கு ஆளாகியிருந்தபோதும், இந்தியா அதை வரவேற்கிறது. இந்தப் போக்கினை உலகின் பல பகுதிகளுக்கும் விரிவுபடுத்துவதும், அதனை நீடித்து நிலைக்கச் செய்வதுமே இன்றைய அவசரத் தேவையாகும்” என்றார் திருமதிகாந்தி. “இந்த எதிர்மறை அம்சங்களை நாங்கள் தெளிவாகக் காண்கிறோம். அதை எதிர்த்துப் போராட உறுதி கொண்டுள்ளோம். பதற்ற நிலைத் தணிவுப் போக்கினை வளர்ச்சியுறச் செய்வதும், அதனை மேலும் ஆழப்படுத்துவதுமே இன்று காலத்தின் அறைகூவல்; மக்களின் கோரிக்கை” என்றார் பிரெஷ்னேவ்.

இந்துமாக்கடல்பற்றி பிரஷ்னேவ் கூறியுள்ளதை இந்திய மக்கள் அனைவரும் மகிழ்வுடன் வரவேற்கின்றனர். “இந்துமாகடலில் இராணுவ தளங்களை அமைக்கும் நோக்கம் சோவியத யூனியனுக்கு இருந்ததுமில்லை, இப்போதும் இல்லை என்பதை சந்தேகத்திற்கிடமில்லாதவாறு நான் கூறிக் கொள்கிறேன். இதே போன்று அமெரிக்காவும் பிரகடனப்படுத்த வேண்டுமென்று நாங்கள் அழைக்கிறோம்” என்று பிரஷ்னேவ் கூறியதை, இந்துமாக்கடற் பகுதி நாடுகள் அனைத்துமே வரவேற்கும் என்பது உறுதி.

### இந்தியா-சோவியத் நட்புறவு

ஆசியாவில் சமாதானமும், ஸ்திரத்தன்மையும் நீடித்து நிலவவேண்டுமென்பதில் இரு நாட்டுத் தலைவர்களுக்கும் கருத்து உடன்பாடு காணப்படுகிறது. ஆசிய கண்டத்தில் சமாதானம் நிலவவும், ஆசிய நாடுகளது கூட்டுமுயற்சியின் பேரில் அக்கண்டத்தின் பந்தோபஸ்தை உறுதிப்படுத்தவும் மேற்கொள்ளப்படும் எந்த முயற்சிக்கும் சோவியத் யூனியன ஆதரவு தரும் என்று பிரஷ்னேவ் உறுதி மொழிந்தார்.

நாட்டின் மிகப்பெரும் பகுதியை ஆசியக் கண்டத்தில் கொண்டிருக்கும் சோவியத் யூனியன், ஆசியாவின் மிகப் பெரும் நாடுகளுள் ஒன்றான இந்தியா ஆகியவற்றிடையே இத்தகைய கருத்துடன்பாடு இருப்பதால், ஆசிய சமாதானத்தை உறுதிப்படுத்துவதில் இவ்விரு நாடுகளும் முக்கியமான பங்கினை ஆற்றும் என்று கூறலாம்.

இரு நாடுகளுக்கிடையே நட்புறவும், ஒத்துழைப்பும் மேலும் வலுப்படும் என்ற உறுதிப்பாட்டினையும், இரு நாட்டுத்தலைவர்களது கூற்றுகளிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

“நமது நட்புறவு காலத்தின் சோதனையை வென்றுள்ளது; இந்திய-சோவியத் ஒத்துழைப்பின் அஸ்திவாரம் பலமானது; அதனை மேலும் தொடர்ந்து நாங்கள் வலுப்படுத்தி வருவோம்” என்றார் திருமதி காந்தி.

“இந்தியா, இந்திய மக்களின் நம்பகமான நண்பனாக சோவியத் யூனியன் இருந்தது; இருந்து வருகிறது. நம்மிரு நாட்டு மக்களது கூட்டு முயற்சிகளின் மூலம் மனித குலத்தின் அமைதிக்கும் முன்னேற்றத்திற்கும் நாம் நிரம்பப் பணியாற்ற முடியும்” என்றார் பிரஷ்னேவ்.

கார பூர்வமான அங்கீகாரமாகும்.

“சோவியத் யூனியனில் சோஷலிசம் உதயமானதும் வளர்ச்சியுற்றதும், உலக வரலாற்றுப் போக்கை உருவாக்குவதில் ஒரு பெரும் நிர்ணய சக்தியாக விளங்கி வந்துள்ளது” என்று கிரெம்ளின் மாளிகையில் திருமதி இந்திரா காந்தி குறிப்பிட்டார்.

# மாடி ரெயிலை திரிபாதி பார்த்தார்

சென்னை, ஜூன் 13—ரெயில்வே அமைச்சர் கமலபதி திரிபாதி பெரம்பூர் ரெயில் பெட்டி தொழிற்சாலையைப்பார்வையிட்டார்.

தாங்கனியா நாட்டுக்காக அங்கு தயாரிக்கப்பட்டுள்ள மாடி ரெயில் பெட்டியையும் அவர் பார்வையிட்டார்.

ரெயில்வே அமைச்சருடன் போர்டு உறுப்பினர்கள் பி. எம். கவுல், பி. என். கவுல் ஆகியோர் உடன் வந்தனர்.

ஜெனரல் மானேஜர் ஜே. மத்தான தலைவர்களுக்கு ரெயில் பெட்டி தொழிற்சாலையை சுற்றுக் காண்பித்தார்.

பிறகு அமைச்சர் திரிபாதி அதிகாரிகள் இடையே பேசினார். “நல்லவேலை நடந்துவருகிறது” என்று குறிப்புப் புத்தகத்தில் எழுதினார்.

# கவர்னர் திட்டம்

3-ம் பக்கத் தொடர்ச்சி

சங்கத் துணைத்தலைவர் அழகிரிசாமி தலைமை வகித்தார். செயலாளர் ஜி.ரங்கநாதன் வரவேற்றார். பொருளாளர் கிருஷ்ணசாமி நன்றிகூறினார்.

### தத்துவ சாஸ்திரி

தமிழ்நாட்டு மக்களின் உதவியுடன் எனது மனைவி மதுமேபன்ஷா என்னை ஒரு தத்துவ சாஸ்திரியாக மாற்றி விட்டாள் என்று கவர்னர் ஷா கூறினார்.

மயிலாப்பூர் அகாடமியின் சார்பிலும் கவர்னருக்கு நேற்று பிரிவுபசார விழா நடத்தப்பட்டது. அகடமியின் போஷகராக ஷாஇருந்து வருகிறார்.

விழாவிற்கு எம். ஏ. முத்தையா செட்டியார் தலைமை வகித்தார்.

எம். ஏ. எம். ராமசாமி, வைத்தி சுப்பிரமணிய ஐயர், முன்னாள் தலைமை நீதிபதி ராஜமன்னார், முன்னாள் நீதிபதி வெங்கட்ராமன், செங்கல்வராயன் ஆகியோர் கவர்னரைப் பாராட்டிப் பேசினார்கள்.

பி. எஸ். ராமசாமி ஐயர் வரவேற்றார்.

தலைமைசெயலாளர் கார்த்திகேயன் உட்பட பல பிரமுகர்கள் நிகழ்ச்சிக்குவந்திருந்தனர்.

கவர்னர் ஷா பேசுகையில் தாம் பதவியில் வெற்றி படைத்ததற்கு தமிழ்நாட்டு மக்களின் நற்பண்புகளே காரணம் என்றார்.

1970ல் இருந்த ஷா வரல்ல நான். இப்போது மிகவும் மாறிவிட்டேன். ஆனல் இனி மேல் மாறமாட்டேன. தமிழ்நாட்டுக்கு வந்தபின் எனது கண்ணோட்டமே மாறிவிட்டது. இதில் எனது மனைவிக்கு முக்கிய பங்கு உண்டு என்று ஷா கூறினார்.

# லைசென்ஸ் இல்லாமல் வட்டித் தொழில்: அரசு நடவடிக்கை

ஹூப்ளி, ஜூன் 13— லைசென்ஸ் இல்லாமல் தனியே வட்டித் தொழில் நடத்திய ரயில்வே ஊழியர்களை அதிகாரிகள் கையும் களவுமாக பிடித்தனர்.

லைசென்சு இல்லாமல் லேவாதேவி செய்வது சட்டப்படி குற்றமாகும்.

ஹூப்ளி நகரில் இருக்கும் ரெயில்வே ஒர்க்ஷாப்பில் இவ்வாறு சட்டவிரோதமாக வட்டித் தொழில் நடத்திய ரெயில்வே ஊழியர்களை அதிகாரிகள் மடக்கிப்பிடித்தனர்.

கடந்த வியாழக்கிழமை ஹூப்ளி நகர ரெயில்வே ஒர்க்ஷாப ஊழியர்களுக்கு சம்பள நாளாகும்.

லைசென்ஸ் இல்லாமல் லேவாதேவி செய்யும் ரெயில் ஊழியர்கள் பற்றி அதிகாரிகளுக்கு தகவல் எட்டியது. இதைத் தொடர்ந்துசம்பளம் வாங்கிக்கொண்டு ஒர்க்ஷாப்பைவிட்டு வெளியே வந்த ரெயில்வே ஊழியர்களை அதிகாரிகள் சோதனைசெய்தனர்.

இவர்களில் 5 பேர்களின் பையில் சம்பளத்தைவிட பணம் அதிகமாக இருந்தது.

இந்த 5 பேர்களும் ரயில்வே ஊழியர்களுக்கு கடன் கொடுத்து சம்பள நாள் அன்று அந்தப் பணத்தை கொள்ளை வட்டியுடன வசூலித்து விடுவார்களாம்.

அந்த ஊழியர்களிடம் இருந்த அதிகப்படியான தொகை ஆயிரம் ரூபாயையும் அதிகாரிகள் கைப்பற்றினர்.

### ஒழுங்கு நடவடிக்கை

சட்டத்திற்கு புறம்பாக வட்டித் தொழில் நடத்தும் ஊழியர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படாதது ஏன் என்பதற்கு ரெயில்வே அதிகாரி ஒருவர் விளக்கம் கூறியிருக்கிறார்.

கடன் வாங்கியவர்கள் சாட்சி சொல்ல முன்வராததால் சட்டத்திற்கு விரோதமாக லைசென்ஸ் இல்லாமல் வட்டித் தொழில் நடத்துவோர் மீது நடவடிக்கை எடுக்க இயலவில்லை என்று அந்த அதிகாரி கூறினார்.

தனியாக வட்டித்தொழில் நடத்தி கொள்ளையடிப்போரை மடக்கிப்பிடிக்க

4-ம் பத்தி பார்க்க

6-ம் பத்தி தொடர்ச்சி

அரசு நடவடிக்கை எடுத்து வருகிறது.

லைசென்ஸ் இல்லாமல் வட்டித் தொழில் நடத்துபவர்கள் கடன் வாங்கியவர்களை மொட்டை அடித்து விடுகின்றனர்.

இந்த கொடுமையை ஒழித்துக் கட்ட அரசு முடிவு செய்திருக்கிறது.

இந்தச் சட்டவிரோத பேர்வழிகளிடம் கடன் வாங்கி விட்டால் கடன் வாங்கியவர்கள் மீள முடியாதவகையில் மாட்டிக்கொள்கின்றனர்.

அதுவும் சக தொழிலாளியிடம் கடன் வாங்கி விட்டால் சம்பளம் வாங்கும் தினத்தன்று வட்டியையும் அசலையும் ஈட்டிக்காரன் போல்கறந்து விடுவார்கள். சுலபமாககடன கிடைக்க வழியல்லாததால், ‘எவ்வளவு வட்டியானாலும் சரி’யென்று தனியாக வட்டித் தொழில் நடத்தும் முதலைகளிடம் மக்கள் சிக்கிக் கொள்கின்றனர்.

தொழிலாளர்களுக்கு சுலபமாக கடன கிடைக்க வசதியாக ஹூப்ளி நகரரெயில்வே ஒர்க்ஷாப்பில் சிண்டிகேட் வங்கியின் கிளையொன்று திறக்கப் பட்டுள்ளது.

Printed by S. V. G. Sowrirajulu, at the M. C. P. P. S. Press, No 4, South Bank Road Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor
K. SOMASUNDAR, (SOLAI

# சினிமா தியேட்டரில் புகைபிடித்த 30 பேருக்கு அபராதம்

கும்பகோணம், ஜூன் 13—கும்பகோணம் நகரில் சினிமா தியேட்டரில் புகைபிடித்ததாக 30 பேர்களை போலீசார் கைதுசெய்தனர். அவர்கள் மீது தொடரப்பட்ட வழக்கில் அவர்களுக்கு கும்பகோணம் ஜூடிஷியல் மாஜிஸ்திரேட் தலா ரூபாய் பத்து அபராதம் விதித்தார்.


## ஒப்பந்தப் புள்ளி

1. தமிழ்நாடு மின்சார வாரியத்திற்காகவும், இவ்வாரியத்தின் சார்பிலும் கீழே குறிப்பிட்டுள்ள அரக்கு முத்திரையிட்ட ஒப்பந்தங்கள் வரவேற்கப்படுகின்றன.

| வரிசை எண் | வேலையின் பெயர் | குறிப் பிடுகை எண் | ஒப்பந்தப் பிரதியின் விலை | வைப்புத் தொகை | ஒப்பந்தம் பெற்றுக் கொள்ளப் படும் கடைசி தேதியும் நேரமும் |
|---|---|---|---|---|---|
| 1 | தூத்துக்குடி அனல் மின் திட்டம் தரை மட்ட கான்கிரீட் நீர்த் தேக்கத் தொட்டியும் நீர் ஏற்றும் நிலையமும் கட்டுதல் | C 1209 | Rs. 100/- (ரூபாய் நூறு மட்டும்) | Rs. 5000/- (ரூபாய் ஐந்தாயிரம் மட்டும்) | 21—7—76 நாள் 12.00 பகல் |

2. ஒப்பந்தப் பிரதிகள் வேண்டுவோர் ஒவ்வொரு பிரதிக்கும் ரூ. 100/- (ரூபாய் நூறு மட்டும்) (விற்பனை வரி உட்பட) ரொக்கமாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ, 1/155, அண்ணா சாலை, சென்னை-2 (600002) என்ற விலாசத்திலுள்ள கணக்கு அதிகாரி (ஸ்பெஸிபிகேஷன்) சென்னை, மின்சார திட்டம் (விநியோகம்) அவர்களுக்கு செலுத்தி பெறப்பட்ட ரசீதை இணைத்து விண்ணப்பித்துக் கொள்வதின் பேரில் நகலை கீழே கையொப்பமிட்டுள்ளவரின் அலுவலகத்தில் பெற்றுக்கொள்ளலாம். கணக்கு அதிகாரி (ஸ்பெஸிபிகேஷன்) சென்னை மின்சாரத் திட்டம் (விநியோகம்) அவர்களுக்கு மேற்படி பணம் செலுத்தும்போதும், மற்றும் எல்லாவிதமான கடிதப் போக்கு வரத்திலும் குறிப்பு எண் C 1209 தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.

3. மேலே குறிப்பிட்டபடி உறையின்மீது எழுதப்பட்டு அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப் புள்ளிகள் மேற்படி வேலைக்காக இரண்டு நகல்களில் 1976-ம் ஆண்டு ஜூலை மாதம் 21-ம் தேதி நண்பகல் 12.00 மணி வரை தமிழ்நாடு மின்சார வாரியத்தின் சார்பாக கீழே கையொப்பம் இட்டவரால் பெற்றுக்கொள்ளப்படும். டெண்டர்கள் அதே நாளில் மாலை 2.30 மணிக்கு கீழே கையொப்பம் இட்டவரின் அலுவலகத்தில் டெண்டர்கள், வந்திருக்கும் ஒப்பந்தக்காரர்கள், அல்லது அவர்களது அதிகாரம் பெற்ற பிரதிநிதிகள் முன் ஒப்பந்தங்கள் திறக்கப்படும். வைப்புத் தொகையின்றி சமர்ப்பிக்கப்படும் ஒப்பந்தங்களும், குறிப்பிட்ட காலம் கடந்து தாமதமாக சமர்ப்பிக்கப்படும் ஒப்பந்தங்களும் கண்டிப்பாக நிராகரிக்கப்படும். அனுப்பப்பட்ட ஒப்பந்தப் பிரதிகள் தபால் போக்கு வரத்தினால் காலதாமதம் ஏற்பட்டாலும் அல்லது தபாலில் தொலைந்து போனாலும் இவ்வாரியம் பொறுப்பல்ல.

4. குறைந்த அல்லது எந்த ஒப்பந்தத்தையோ ஏற்றுக் கொள்வதற்கு தமிழ்நாடு மின்சார வாரியம் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளாது. எக்காரணமும் தெரிவிக்காமல் எந்த ஒரு ஒப்பந்தத்தையும் அல்லது எல்லா ஒப்பந்தங்களையும் நிராகரிக்க முழு உரிமை இவ்வாரியத்திற்கு உண்டு.

157, அண்ணாசாலை,
சென்னை-600002.
தந்தி — Civilec

மேற்பார்வைப் பொறியாளர்,
திட்டங்கள் (பொதுவியல்)



WE'LL HELP YOU MAKE A MARK IN YOUR MARKETS

The MSIL Marketing Mix

Totally available under one roof, Geared to provide every marketing service from research to distribution. Experienced in selling a wide range of products — from cosmetics to television to transformers — with unit values from one rupee to tens of thousands. It's the most comprehensive package of integrated marketing services ever offered to manufacturers in India...
The MSIL Marketing Mix.

Instituted in 1966, MSIL today operates a planned selling programme, through offices and depots in major cities, covering the whole of India. In 7 short years the company has registered a steady and impressive growth.

Since 1973 we have developed research, consultancy and advertising facilities.
And, now, our international division, with an office in London, offers you an option on international markets as well. Wouldn't you like to know how the MSIL Mix can sell your product too?

CONSUMER SURVEYS
DATA PROCESSING
FEASIBILITY STUDIES
PROGRAMMED MARKETING
MARKET RESEARCH
PRICING
ADVERTISING
PRODUCT DEVELOPMENT

MYSORE SALES INTERNATIONAL LIMITED
'Hari Nivas' 36 Cunningham Road, Bangalore 560 052. Tel: 74021-22-23
Offices at Bombay • Calcutta Madras • New Delhi London, U.K.